**Sri A. GOVINDASAMI :** நமது மாநில சர்க்கார் ஸ்காலர்ஷிப் வாங்குவதற்கு பின்தங்கிய மாணவர்கள் 50 சதவிகிதமும், மிகவும் பின்தங்கிய மாணவர்கள் 45 சதவிகிதமும் வாங்க வேண்டிய நிலைமை இருக்கிறது. அதே 5 மார்க்குகள் குறைவாக பின்தங்கிய மாணவர்களும் வாங்கினால் போதும் என்ற கருத்தை நமது சர்க்கார் ஒப்புக் கொள்வார்களா?

**The Hon. Sri P. KAKKAN :** இதிலே பின்தங்கிய மாணவர்கள், மிகவும் பின்தங்கியவர்கள் என்ற பிரச்னை எழவில்லை. மத்திய சர்க்காரைப் பொறுத்த வரையில் எல்லோரையும் பின்தங்கிய மாணவர்களாகத்தான் கருதுகிறோம்.

*Conference of Block Development Officers*

*1563 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN :** கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1961 ஏப்ரல் மாதத்தில் சமுதாய அபிவிருத்தி அதிகாரிகளின் கூட்டம் சென்னையில் கூடியதா ?

(இ) அதில் என்ன முடிவுகள் செய்யப்பட்டன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :**—(அ) No, Sir.

(இ) Does not arise.

*Block Development Offices*

*1564 *Q.*—**Sri A. A. RASHEED. (on behalf of Sri N.R. THIYAGARAJAN) :** கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, திண்டுக்கல் தாலூக்கா, ரெட்டியார் சத்திரம் பிளாக் ஆபீஸ் கட்ட டெண்டர் விடப்பட்டதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** Yes, Sir.

1565 *Q.*—**Sri S. M. ANNAMALAI :** கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம் போளூர் சமுதாய நலத் திட்ட அலுவலக கட்டிடத்திற்கு நில ஆர்ஜிதம் எப்போது என்ன விலைக்கு செய்யப்பட்டது ?

(இ) எப்போது பணம் தரப்பட்டது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** (அ) The land was acquired on 31st January 1958 at a cost of Rs. 1,311.

(இ) Payment was made on 24th February 1958.

**Sri S. M. ANNAMALAI :** ஸ்டாப் க்வார்ட்டர்ஸ் கட்டுவதற்கு அக்விசிஷன் செய்யப்பட்ட நிலங்களுக்கு ஏன் இவ்வளவு நாள் காம்பன்சேஷன் கொடுக்கப்படவில்லை. கொடுக்கப்படாததற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** கனம் அங்கத்தினர் கேட்ட கேள்வி பின்வருமாறு—

" (*a*) when land was acquired for constructing the Block Development Office, Polur, North Arcot district; and the cost of land acquisition; and

(*b*) when the payment was made?"

I have answered it. வேறு நிலத்தைப்பற்றி தகவல் கொடுக்கவேண்டுமென்றால் தனிக்கேள்வி போடவேண்டும்.